ஸ்ரீ

கண்ணன் துணை

ஸ்ரீமகா பாரதத்தில் ஓர்பாகமாகிய

# இலக்ஷ்மணைதேவி மாலையிடு நாடகம்



இஃது

விக்கிரவாண்டி சாலை

## கிருஷ்ணபிள்ளை அவர்களால்

இயற்றியது.



கூடலூர் செட்டிபாளையம் மதுரை சங்கிலிருப்பதிலிருக்கும்

பிரக்கி இஸ்டன்

**எஸ். முருகேச உபாத்தியாயர் அவர்களால்**

பற்பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

சீர்திருத்தப்பட்டதை,

**மயிலை. திருவேங்கடமுதலியாரவர்களிடம்**

சர்வ சுதந்தரமும் பெற்று,



**ஆரம்பேடு. குழந்தைவேல்முதலியார்**

தெய்வமகள் விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

 19[illegible]0 [அணா 12

34. காண்டவராயபிள்ளை வீதி, சென்னை.

# ரிஜிஸ்டர் அறிவிப்பு

இதனால் சகலமான அச்சுக்கூடத்ததிபர்கட்கும் மற்றவர்களுக்கும் தெரியப்படுத்துவது யாதெனில், "இலக்ஷ்மணதேவி மாலையிடு நாடகம்" என்னும் இப்புத்தகத்தை, சென்னை வாணிவிலாச அச்சுக்கூடத்தலைவர் மயிலை. திருவேங்கடமுதலியார் அவர்கள்பேரிலிருந்த ரிஜிஸ்டர்காபிரைட் சுதந்தரத்தை, அடியிற்கண்ட நான் கிரயத்திற்குப்பெற்று என்னால் அச்சிட்டு மகாகனம்பொருந்திய கவர்ண்மெண்டார் அவர்கள் சட்டப்படிக்கு "காபிரைட்"செய்திருக்கிறேன். ஆகையால் இப்புத்தகத்தை என்னுடைய அனுமதியின்றி யாரும் அச்சிடக்கூடாது என்பதைத் தெரியப்படுத்தி யிருக்கிறேன்.

இப்படிக்கு

**அமரம்பேடு. குழந்தைவேல் முதலியார்**

24. தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

ஸ்ரீமகா பாரதத்தில் ஓர்பாகமாகிய

# இலக்ஷ்மணுதேவி மாலையிடு நாடகம்



## விநாயகர் கொலுவுக்கு வருகிற விருத்தம்

திருமுகமதியும்கொன்றை செஞ்சடைமுடி விளங்க
கருமணிமாலைபூண்டு எதிர்புஜந்தனிக்கையாட
அருமையாய்சிவகணங்கள் அமரர்கள்முனிவர்வாழ்த்த
கரிமுகமுடையதேவன் கணபதிவருகின்றாரே.

தரு

சுந்தரக்கணபதி வந்தாரே — வேடிக்கையாகிய
சுந்தரக்கணபதி வந்தாரே

சுந்தரக்கணபதிவந்தார் — சொல்லும் கதைக்குகந்த
சந்தோஷமாகயிந்த — சபைக்கு அருள்புரிய

சோதிமணிமுடியிலங்கச் — சுந்தரப்பணிதுலங்க
தும்பிகைமுன்பாக துலங்க
ஆதிமூலாதரன் — ஆகுவாகனமேறி

வேதங்கள்சூழ தேசமெங்கும் — வேதநாதங்கள்பாட
ஆவலாய் அருள்செய்யும் — நாதன் திவ்யபாதன்

நாலேநகரில்வாசன்சாம்பன் — லெஷ்மணுதேவிமாலையிடு
கதைக்குவந்து அருள்புரியும் சுந்தரக்கணபதிவந்தாரே ஜெய

# இலக்ஷ்மணாதேவி மாலையிடு நாடகம்

## பொது வசனம்

இந்தப்பிரகாரமாக விநாயகமூர்த்தி கொலுவாயிருக்கும்போது திரியோதிரமகாராஜன் வாசலதிகாரியாகிய கட்டியக்காரன் வருகிற விதங்காண்க.

## கட்டியன் விருத்தம்

தட்டிச்சல்லடமுங்கட்டி சரிகைபாகையுமிலங்க
வல்லயம்சூரிவாங்கு வரிசையாவாளுமேந்தி
சொல்லிய துரியராசன் செங்கோலும்கையிலேந்தி
கல்மீசைமுறுக்குமீசை கட்டியன்வருகின்றானே.

வ-ம். அகோகேளப்படியென்றால் அஸ்தினாபுரி பட்டணத்தை தகத்தோடும் அரசாக்ஷி செய்துவராநின்ற துரியோதனமகாராஜனும் நல்லம்மானாகிய சகுனிமாமனும் கர்னன் சல்லியன் அஸ்வத்தாமன் பீஷ்மாச்சாரி துரோணாச்சாரி கிருபாச்சாரி அனேக ராஜாக்களும் படைசூழத்தக்கதாக கொலுவுக்குவருமுன்னே நாம் சிம்மாதனம் அலங்காரம் செய்யும்படி கொலுவாகின்றோம்.



## திரியோதிரன் கொலுவிருத்தம்

வீராதிவீரரெல்லாம் பணிந்துசூழ விலையில்லாமணிபணிகள் அலங்கரித்து, பாருதிபதியாகவந்ததிரன் பம்பைமணிமுரசுடங்கா பேரியாட, யேகாதிபதியானதம்பிமாரும் இன்பமுறுசகுனிகர்னன் படைநெருங்க, சூராதிசூரகெம்பீரன் துரியபதிகொலுவுக்கு வருகின்றானே.

திரியோதிரன் கொலுவுக்குவருகிற தரு இ-ம்-நாட்டை-ஆதிதாளம்

இராஜராஜேந்திரன்-ராசன் திரியோதிரன்
ராசன்கொலுவதாகினான் நவமணிதவறில்லா - ராசன்
தேசதேசர்கப்பணம் செலுத்தும் செங்கோலிலங்க

சுருளல்லது முடுக்கு

தேரணியும்பரிபாலனம் பெருகி
ஏரணி படையுடன்
தாரணியஞ்ச ராசராசேந்திரன்
சக்கரவட்டகுடையும் தழையவந்துகவிக்க
தரணியரசரெல்லாம்பணிந்து கரம்குவிக்க
உக்கிரசூலமும்வேலும் தனுதண்டமும்பிடிக்க
உலகம்கிடுகிடென்ன ராசராசேந்திரன்
முடுக்கு - ஓதியபணிமுடி சோதிமிகுந்திட
நீதிலாதகுருவேதியருடனே ராசராசேந்திர
தம்பிமாரும்சகுனி தமையன்கர்னனும்கூட
தளபதிமதிமந்திரி சகலயாசகர்நாட
அரம்பையூர்வசியென்ன பரதமாதர்களாட
நாதகீதசின்னம்புரிதம் நமரிசின்னங்கள்பாட
முடுக்கு - நத்தியகாவலர் கத்திகளேந்திய
சுத்திலுமவருகவே பத்தியதாக ராசராச
அண்டமளாவிய அரவக்கொடிபறக்க
அவனிக்கதிபதியாய்வந்து புவிப்பறக்க
கண்டசரமணியும பணிகள் அதுங்கிரக்க
கற்பகத்தருவிந்திரபோக செல்வம்பெருக
முடுக்கு - கல்விசிரேஷன்மணி செல்வியைதந்திட
சொல்மொழி எண்ணியே நல்மனதாக
ராசராசேந்திரன் ராசன் துரியோதிரன்

துரியோதிரன - விருத்தம்

சகுனியே எனதுமாமா சகலருமசொல்லக்கேளீர்
நவமணி எனதுசெல்வி லக்ஷ்மணாதேவிதானும
வெகுவிதயௌவனகாலம் விருதாவாய் இனியிருக்க
தருமமோவொருவருக்கு தந்திடவிதம்சொல்வீர்.

துரியோதனன் வசனம்

கேளும்மாமா சகுனி அண்ணா கர்னமகாராசனே ஜென்மாந்திரபுண்ணியத்தினாலே எனக்கு உதித்தசெல்வியான லக்ஷ்மணாதேவி எவ்வளவு பருவகாலமானபடியினால் அக்குழந்தையை ஒரு ராசகுமாரனுக்கு பாணிக்கிரகணஞ்செய்து கொடுக்காமலிருக்க ஒண்ணாது ஆகையால் யெனதுபுத்திரசெல்வத்தை யாருக்கு கொடுக்கலாம் அறிந்துசொல்லுங்கள் பெரியோர்களே.

சகுனி விருத்தம்

வண்மைசேர்மதிகுலத்து மன்னர்மன்னவனேகேளாய்
பெண்மனதறிந்திடாமல் பேசவும்பலனுண்டாமோ
கண்மணிதனையழைத்து கருத்தைநீயறிந்தாலிப்போ
உண்மையாய் மணஞ்செய்விக்க உறுதியுண்டாகுந்தானே.

சகுனி வசனம்

கேளும் துரியோதன மகாராசனே பெண்ணுடைய மனதை யறியாமல் யொருயோசனையுஞ்செய்யக்கூடாது ஆகையால் உனது குமாரத்தியை அழைப்பித்து அதினுடையமனக்கருத்தை அறிந்து கொண்டு நடத்துவது நலமாகும் துரியோதன மகாராசனே.

துரியன் வசனம்

அப்படியே உங்கள் மனதுபிரகாரமே எனதுகுமாரத்தி கருத்தையறியவேண்டும் அடிபணிப்பெண்களா நீங்கள் சனுதியாக அரண்மனைக்குச்சென்று எனதுகுமாரத்தியைநாம் அழைத்தோமென்று அதிகசீக்கிரத்தில் அழைத்துவாரும் பணிப்பெண்களா.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக துரியோதனன் குமாரத்திலக்ஷ்மணதேவி தனது தந்தையைக்காணநவமணிபணிகள் அலங்கரித்துக்கொண்டு கொலுவுக்கு வருகிறவிதங் காண்க.



லக்ஷ்மணதேவி விருத்தம்

சகலசம்பன்னரான தந்தையும் அழைத்தசேதி
புகலவும்தாதிமார்கள் பூரித்துமனங்களித்து
பலநவபணிகள்பூண்டு பாரெல்லாமதிசயிக்க
நகையொளிவதனரூபி லக்ஷ்மணதேவியும்வருகின்றாளே.

தரு - சந்திரகுலத்திலவந்த சுந்திரலக்ஷ்மண
தையல்சிரோமணிவந்தாள் நல்லநடைநொடியபிரய

# இலக்ஷ்மணாதேவி மாலையிடு நாடகம்

மடமயிலாகியமாதையல் சிகாமணிவந்தாள்
செந்தூரத்திலர் தமின்ன சேலைப்பளபளென்ன
முடுக்கு - சித்திரம்போலவே ன ஷணா
நெற்றியில்சுட்டியும் முத்துமிலங்கிட சநதிரகுலத்தி

பேடைநடைநடந்து வாடைசவ்வாதணிந்து
வந்தாள்
நல்லவஞ்சியகிளிமொழி ரஞ்சிதமாகவே
பெண்கள்சிகாமணி வந்தாள்
யீடில்லாததிரு யிவளோரதி என்னவே
முடுக்கு - இன்னிலமெச்சிய பொன்னிறம்போலவே
மாது உன்னிமையாக சந்ரகுலத்

முத்துப்பளபளென்ன ரத்
முல்லைநகைதுலங்கவே நல்ல
உச்சிதமாமுலை கச்சையிருக்கிய
முல்லைநகைதுலங்கமே சித்திரக்கம்மல்
சிமிக்கிவைத்திழைத்த மாமணிகள்
முடுக்கு - செங்கதிர்சுடரென தங்கணகடகமும்
எங்குமிலங்கியமங்களமாக சந்திரகுலத்தில்

பாசமானதந்தைதன்னை நேசமாயழைக்குமுன்னே
பதமும்விதமறியவே நல்லசேதிகள்
கூறியேதாதிகள்சூழவே பகரும்விதமறியவே
வாசமலர்சூடி வண்டுசிந்தங்கள்பாடி
முடுக்கு - மைக்குழலாகிய சக்கரைமாமொழி
பக்குவமாகவே மிக்கவேகூறிட சந்திரகுலத்

## லக்ஷ்மணாதேவி விருத்தம்

மாதுதான் சபையில்வந்து மகிழ்வுடன் தந்தைதன்னை
ஏதுகாரியமா என்னை இட்சணமழைத்தசேதி
ஓதுவீர் என்றுசொல்லி உத்தமியாளுமப்போ
பாதமேபணிந்துமந்த பாவையும் வணங்குவாளே.

க்கும் - க்கும் - தர்க்கம் - தரு

சந்திரகுல ல்வந் தெலையாமலர்கையா
தந்தையே யான்சரணம்
சிந்தையில் அன்பாக
முடுக்கு - தெரியும்படி பரிவாகவே
அடியாளிடம் உரைசெய்குவீர் சந்திரகுல ல

### துரியோதனன் தரு

அரிதானயென்மகளே குலமணியேநவமணியே
அம்மணிநிருவாணி பரிவாகஉனக்கம்மா
நமணம் செய்விக்க
முடுக்கு-மதமாகிய நலமாமது
நாடியவிதமாகுமோ அரிதானயென்மகளே

### லக்ஷ்மணாதேவி தரு

கற்பனை எப்படியோ அய்யாமலர்கையா
கருத்தின்படிநடக்க அற்புதமெண்ணாமல்
இடமது சொல்வேனோ
முடுக்கு-அடவாபதில்படவே மனதிடமாகவே
கடவுளின்கற்பனை எப்படி

### துரியன் தரு

யாருக்குமுன்னைக் கொண்டு
குலமணியே மலரணியே
அளித்துமனங் களிப்பேன்
யாருக்குள் உனக்கேற்ற நாயகன்காணாமல்
முடுக்கு-பயிரின்றுமே தெரிவித்தேனே
சரியொத்தவ ரறிவித்திட
பிரியத்துடனுரை செய்குவாய்-யாருக்குமுன்னை

### லக்ஷ்மணாதேவி தரு

என்னைப்படைத்த யீசன்
என்னையா மலர்கையா
எனக்கொரு நாயகனே
தன்னைப்படைக்காமல் இருப்பதுண்டோசொல்லும்
முடுக்கு-தனசாலியை மனம்வாடவும்
கனமோயிது யெனமோஎனை

### துரியன் தரு

இரஞ்சித என்மகளே
குலமணியே மலரணியே
நான்யெந்தராஜனுக்கு நெஞ்சமகிழ்ந்துமே
தந்திடுவே னம்மா
முடுக்கு-நேராகவே சீராயதை
பாராய்வெகுசீராய் ரஞ்சிதஎன்

லக்ஷ்மணதேவி தரு

ஆரைக்குறித்துச் சொல்லுவேன்
யேனையாமலர் கையா
அவனியரார்க்குள்ளே பேரையும்
ஊரையும்நான் கண்டதில்லையே
முடிக்கு-பேரும்பல நேரும்படி
கூடும்வினை தீரும்-ஆரைக்குறி

சூரியன் தரு

மங்கைசிரோண்மணியே குலமணியே
மலறணியே மனதின்படிநடக்கதிங்கள்
குலத்துக்கு மானம்வாராதம்மா
முடிக்கு-திரமாகவேயொரு யோசனை தருவாய்
மணம்புரிவா மங்கை

லக்ஷ்மணதேவி விருத்தம்

எந்தையேசொல்லக்கேளாய் எனக்குமேசுயஞ்சாட்டித்து
வந்திடசெய்தாலந்த வரிசைமன்னவருக்குள்ளே
அந்தமுள்ளவரைக்கண்டு அழகியமாலைசூட்டி
சந்தோஷம்பெருகிவாழ்வேன் சம்மதமிதுதானையா.

வ-ம். கேளும் எனது தந்தையே எனக்கானல் இப்பவே சுயம் வரம் சாட்டித்து தேசத்திலுள்ள ராஜகுமாரர்களை இவ்விடம் வரும் படியாகச்செய்தால் அவர்களை என்கண்ணால் பார்வையிட்டு எனக் குத் தகுந்தநாயகனை விவாகம் செய்துகொள்ளுகிறேன் தந்தையே.

துரியோதிரன் விருத்தம்

அப்படிதானேசெய்வேன் அரண்மனை தன்னில்சேரும்
எப்படிசெய்வேனென்று என்மாமாசகுனிகாண
ஒப்பினேன்சுயம்வரனை உலகெலாமறியச்செய்து
செப்புவீர்யெந்தனுக்கு சிந்தையும்களிக்கத்தானே.

வ-ம். வாரும் மாமா சகுனி அண்ணா கர்னமகாராஜனே நமது குமாரத்திக்கு சுயம்வரநாட்டி சகலதேசத்து ராசர்களுக்கெல்லாந் தெரிவித்து அவரவர் குமாரவர்க்கத்துடன் சுயம்வர கலியாணத் திற்கு வரும்படி செய்யவேண்டும் மாமாவே.

சகுனி விருத்தம்

மருமகனேசொல்லக்கேளும் மனதின்படியேயிப்போ
உருமையாகிறுபமொன்று யுலகெலாமறியத்தானே
பிரியமாயெழுதியாணும் பிலமதயாணுப்பிவிட்டேன்
வருகிறார்அரசரெல்லாம் மகிழ்ச்சியாய்பார்த்திடாயே.

வ-ம். கேளும் எனது மருமகனாகிய துரியோதனமகாராஜனே உன் மனதின்படியே நிறுபம் எழுதி அனுப்பினேன் அந்த அரசர்களெல்லாம் வருவார்கள் அவரவர்களுக்கு முயற்சி செய்து கொண்டிரும் திரியோதனா.

பொது விருத்தம்

அரசருக்குநிறுபமது எழுதிவிட்டு
அரண்மனையிற்போய்சேர்ந்தான் துரியராசன்
விருதுடனே தூதர்சென்று உலகமெல்லாம்
விரைந்தோடிநிறுபமதை காட்டிக்கொண்டு
துருசுடனே துவாரகையில் வருகும்போது
துய்யவொளிசாம்புவனும் கண்டுகொண்டு
வரிசையுடன்ரதமேறி பாதைக்கூடி
வருகிறான் துரிதமுடன் வருகின்றானே.

வ-ம். இந்தப்பிரகாரமாக தூரியன்கொடுத்த நிறுபத்தைகொண்டு போய் குருதேசத்து இராசர்கட்குக்காட்டி துவாரகாபுரியில் வந்து சாம்புவதேவனுக்கு நிறுபத்தைக் காட்டினவுடனே ரதமேறி சாம்புவதேவன் அஸ்தினாபுரிமார்க்கம் வருகிறவிதம் காண்க.

சாம்புவதேவன் வருகிற விருத்தம்

பகலவன்கிரணம்சோதி பணிகளும்அலங்கரித்து
தகதகன்றுடைபூண்டு தனிரதமதனிலேறி
அகமகிழ்மனதிலெண்ணி யஸ்தினாபுரியைநாடி
செகமெலாம்நடுங்க சாம்புவதேவனும் வருகின்றானே.

தரு-தேசம்நடுங்கவர் தாசர்பணியும்
சாம்புவதேவனிதோ வந்தானே
நல்ரதத்திலேறியே தேவனிதோவந்தானே
வாசவனும் களிக்கவந்தான் கெம்பீரத்திற்
முடுக்கு-வரிசிலைவாளியும் பலமுடனேந்திய
பரிவுடன் அஸ்தினாபுரிதனைநாடியே தேசம்-நடுங்கவர்

வாகுவல்லயம்மின்ன வச்சிரபுஜங்கள் துன்ன
மகரக்கொடியிலங்கவே நவமணிகளழுத்திய
மகரக்கொடியிலங்க நாகரீகவதன
நவரத்தினமணி துன்ன
முடுக்கு-ரஞ்சிதமாகிய வஞ்சிமயங்கிட
நெஞ்சமகிழ்ந்துமே சஞ்சலமில்லாமல் தேசம்-நடுங்கவர்

கரிபரிசேனைகள் பாரில்நெருங்கிடவே
கடிகிப்பயணமாகியே நல்லசுயம்வரம்நாடியே
கடிகிப்பயணமாகியே வரிசிலைவேந்தர்கள்
வந்தவரை யெல்லாம்

முடிக்கு-வாட்டியே அவர்களை ஓட்டியபின்னையும்
கூட்டியேவீரம் காட்டுரேனென்றுமே தேசம்-நடுங்க

வடிவா துவாரகைவிட்டு அடவாய்
அஸ்தினாபுரிமாநகர் தனனை நாடியே
மிக்கதேவருமெச்ச மாநகர் தன்னை நாடியே
கடலொலிபேரிகைச் சின்னமுழங்க
முடிக்கு-சந்தமும்பெருகியே விந்தையே
லக்ஷ்மணா சுந்திரமறியவே
சிந்தையிலெண்ணியே தேசம்-நடுங்க

சாம்புவன் விருத்தம்

சந்தோஷம்பெருகிவந்த தளபதிசொல்லக்கேளாய்
அந்தமாநகரைவிட்டு அஸ்தினாபுரியைநாடி
வந்தோமேஅழகுபூங்கா வனமதைகண்டறிந்தோம்
மிந்தநல்விடமிருந்து இன்பமாயேகலாமே.

வ-ம். கேளும் தளபதியே துவாரகாபுரியைவிட்டு அஸ்தினாபுரி சமீபத்தில் வந்துவிட்டோம் இந்த திவ்ய பூங்காவனத்தில் சற்று நேரம் இருந்து இளப்பாரி போகலாம் வாருங்கள் தளபதியே.

பொது விருத்தம்

வந்தவர்கள்வனத்திலே யிறங்கிப்பார்த்து
மனமகிழ்ந்துதானுமே யிருக்கும்போது
அந்தமுள்ள அத்திபுரம் தன்னையாளும்
அரசனிடபுத்திரியும் ஆவலாக
சிந்தையதுதான்மகிழ்ந்து தாதியோடும்
சிங்காரவனம்பார்க்க லக்ஷ்மணாதேவி
சந்தோஷத்துடனே பாங்கியோடும்
சதிருடனேதான் நடந்துவருகிறாளே.

வ-ம். இந்தப்பிரகாரமாக ஸ்ரீ கிருஷ்ணதேவருடைய குமாரனை சாம்புவதேவன் மந்திரிமார்களுடனே கூடிக்கொண்டு நந்தவனத்தில் வந்து இறங்கி இருக்க அப்போது லக்ஷ்மணாதேவியானவள் தாதிமார்களுடனே கூடிக்கொண்டு நந்தவனம்பார்க்க வருகிற விதம் யெப்படி யென்றால்.

லக்ஷ்மணாதேவி நந்தவனமேகுதல் விருத்தம்

செகந்தனிலழகுமிக்க செல்வதாதியரேகேளாய்
சகந்தனில்மகிழ்ந்துஅன்பாய் அருமைபூங்காவுக்கேகி
சுகந்தமாமலர்கள்சூடி துலங்கியவனவேடிக்கை
மகிழ்ந்துமேபார்த்துநாமும் மகிழ்ச்சியாய்வருகுவோமே.

வ-ம். கேளுங்கள் எனது தாதிமார்களே நாம் எல்லோரும் சிங்காரவனம்சென்று அதினுடைய வேடிக்கை விநோதங்களைப் பார்த்து விளையாடிக்கொண்டு வருவோம் வாரும் பாங்கிமார்களே.



லக்ஷ்மணாதேவி தரு

தங்கசிறேன் மணியே யழகுள்ளசரியான தாதிமாரே
சிங்காரவனம்பார்க்க என்னம்மணிசேயிழையே
வாருங்கள் பச்சபுரு அன்னமே
என்பைங்கொடி தாதிமாரே

உச்சிதமாவனத்து விந்தையுன்னிதம்
என்னசொல்வே ஆடைசரிகைமின்ன
மார்பினில்சந்திரஹாரம் பளபளென்ன
வாடைபரிமளிக்க எந்தன்வடிவான தாதிமாரே

செவ்வல்லிசெண்பகமும் கோங்குசீருள்ளசாமந்தியும்
இவ்வனமென்னசொல்வேன் எந்தன் அழகுள்ள தாதிமாரே

கொஞ்சுதடிகிளிகள் ஓயிலோகுயிலோசைபாடுதடி
வஞ்சியே இதைப்பாரும்
யாதோமயில்விளையாடுதடி தந்தியழகைப்பாரடி
வனவிந்தைரஞ்சிதம் கொஞ்சுதடி
மதிமுகதாதிமாரே பூஞ்சோலைகள், வளரும் துளிரைப்பாரடி

பொது வசனம்

அகோ தெப்படியென்றால் லக்ஷ்மணாதேவியும் தாதிமார்களும் கூடிக்கொண்டு வனசிங்காரங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது சாம்புவதேவன்கண்டு மோகங்கொண்டு இவளாரென்று சொல்லுகிறவிதம் எப்படியென்றால்.

சாமபுவதேவன் தரு

சித்திரப்பதுமைபோல யெத்தனைசோதியாய்பிரகாசி
சேயிழைஇவளாரோ நான்என்னசெய்வேன்

கர்த்தனிவளை நான் காணக் கண்களகூசுடு
கதிர்மணிபணிகளும் சொலித்துமிகவிசுதே
முடுக்கு-பத்தரைமாத்துப் பணிகுலுங்க
பாவையேமாமதி முகமிலங்க
முத்துமாமணி துலங்கவே
முன்னும்பின்னும் பணித்துலங்க
எத்திசையெட்டும் மதித்தோ
வித்தகனென்னம்மா விதித்ததோ
சுத்தகங்கமா வகுத்ததோ
பத்தினிஎங்கும் துதித்ததோ
பக்குமைங்குழல்சக்க சித்தி

அறிவையிவளோ ரதியாரென்றுநானறியே
யணைவோமென்றுநெருங்க அரசிமனமரிவோம்
பெருகொளிமாதுதன்னை யிணங்காமலேப்பிரியேன்இப்
பெண்ணால் சுகம்கிடைக்க
போகுமோ நானறியேன்
முடுக்கு-கறும்புவில்மதன் பூட்டிடவே
காமசரங்களை மீட்டிடவே
அரும்புமலர்களை நாட்டிடவே
அங்கமுழுதும் மேல்வாட்டிடவே
இரும்புமனதாகிய குயிலோ
ஏகபோகமன தாகியமுயிலோ
அரும்போபல் வரிசைகலொளியோ
அண்டத்தில் வாழ்கின்றகுயிலோ
அற்புதகிற்புத நற்பதபொற்பத சித்திரப்பதுமை

கொங்கைகொடம் திறட்டிக்கொண்டு
வாடிக்கண்ணட்டி கொஞ்சும்கிளிமொழியே
கூடிவாலீலைக்காட்டி பொங்கமுடன் மன்மதன்
பூஞ்சறம்தன்னைப்பூட்டி போகுதுஉடல்கருகி
பூணிரதத்தாலே மேட்டி
முடுக்கு-எங்கள்குலதெய்வமே வாடி
இன்பசுகந்தருவாய் கூடி
சங்கையுடன்செய்வது மோடி
தகுமோயிதுபேசவும் போடி
மங்கைக்கரசியே மானே
மகிழும்பிரகாசம் தேனே
உங்கள்குலமாவதும் தானே
உலகம்தனைக்காற்பவள் கோனே
ஒப்பிடும்செப்பிடும் உகந்தனகைப்பட சித்திரப்

மன்னன் சூரியன் மகள்மாது
சுயம்வரம்சாட்டவந்த தூதுவரைக்கும்
அரியசிறுபம்காட்ட அன்னமேநான் இங்குவந்தேன்
அவள்தனை மாலை சூட்ட
அன்பானகுலதெய்வம் ஆறுக்காவந்துனைகாட்ட
முடிக்கு-பண்ணுமதன் கணை தாங்கிடவே
பாவையேஎன்றுயர் நீங்கிடவே
எண்ணிதமாயெதிர் தோங்கிடவே
உள்ளமுறுகியே தேங்கிடவே
இன்னம் தயவில்லையே
நல்இன்பமொழி தன்னையே
வெல்லமதியோ மதியோ
உன்மனம் கல்லோ
வச்சிரபச்சை உச்சரிழைத்த
சித்திரப்பதுமைப்போலே யெத்தனைசோதி சித்திர

சாம்புவதேவன் விருத்தம்

கோடிமின்னிடையினாளே கொஞ்சியேபஞ்சவர்ணம்
வடிவானகிளியேயொத்த மருமொழிவாய்திறந்து
அடியேநீபேசொண்ணதோ அன்னமேஊரும்பேரும்
கடியேஎந்தனுக்கு கன்னியேயுரைசெய்வாயே.

சாம்புவதேவன் வசனம்

கேளும்பெண்ணே சோதிப்பிரகாசமான மின்னலுக்கொப்பான இடையினையுடைய பஞ்சவர்ணக்கிளியே உன்வாயைத் திறந்து மறு உத்தாரம் சொல்லக்கூடாதோ என்மீதில் கொஞ்சம் தயவுசெய்து உன்னுடைய ஊரும்பேரும் உன் தாய்தகப்பன் பேரும் எனக்குத் தெரியும்படியாக சொல்லவேண்டும் பெண்ணே.

லக்ஷ்மணாதேவி விருத்தம்

சோமசுந்திரனேகேளாய் துலங்கியசூரியராசன்
மாமகளென்றெண்ணமல் வந்தெதிராகநின்று
காமசன்னதமேகொண்டு உன்கருத்தையும்பழித்துவிணாய்
நீமதிகலங்கிபேசும் நிறுபனேயேகுவாயே.

வ-ம். கேளும் ராசகுமாரகா உலகமெங்கும் பிரகாசித்திருக்கும் குருகுலத்தில் வந்துதித்த சூரியோதனமகாராசன் தவபுத்திரியாளான லக்ஷ்மணாதேவியென்று சொல்லுவார்கள் அதைப்பாராமல் என்னெதிராகநின்று காமசன்னதம்கொண்டு மதம்கொண்டவனை போல் கறுத்தழிந்து நிற்கவேண்டாம் அப்புறம்போம் ராஜ குமாரனே.

சாம்புவதேவன் தர்க்கம்-தரு

மானே மகிழ்ந்தமே நான் வந்தேன் உந்தனைத் தேடி
மானே தேனே துவாரகை கிருஷ்ணதேவர்
மைந்தன் நான் தாண்டி.

முடுக்கு-தெள்ளுமணியே உன்னை கொள்ள
முறையெனக்கு உள்ள மகிழ்ந்து
நான் கள்ளம்செய்திட வந்தேன் மானே

லக்ஷ்மணாதேவி தர்க்கம்-தரு

என்னவார்த்தைகள் பேசுறாய்
ராசகுமாராயிது உனக்கடுக்குமோ
என்னலே நீமடியஎழுதிய விதிப்படியோ

முடுக்கு-இடர்கள்வந்து றுடர்வது முன்னமே
எட்டநடவும்வதைபட்டிடவிதியோ என்ன

சாம்புவதேவன் தரு

ஆசைக்குகந்த நாயகி
உன்னைப்பிரிய மனம்வருமோ ஆசைக்
தேசமெங்கும் நடுங்கும் தீரனென்றறியாமல்

முடுக்கு-சிக்கினபோதே பக்குவம்சொல்லடி
முாச்சிக்கிறாய்மனம் கூசுவதுண்டோபோடி • ஆசைக்

லக்ஷ்மணாதேவி தரு

மேலானவீரம் பேசுநீர்
எனக்கெதிரில்லை யென்றுமே மேலா
சிலாயிதென்னபுத்தி சேதியறிந்திடாமல்

முடுக்கு-சிந்தைகலங்கியே வந்துமே தவிக்குநீர்
சுந்தைதாய் இலங்
நொந்திடவிதியோ மேலான

சாம்புவதேவன் கொச்சகம்

மானே மரகதமே மாங்குயிலே பூங்கிளியேதேனே
மதன்சரத்தால் தேகமெங்கும் கருகுதடி-நானே
மணம்புரிந்து நல்லசுகம் தந்திடுவேன்மானே
விழியணங்கே மெல்லியரே என்பின்னே வருவாயே.

சாம்புவன் வசனம்

கேளும் பெண்ணே மதனரஞ்சிதமே உன்னைக் கண்டபோதே எனக்கானால் மன்மதவிகாரம் மிஞ்சுகிறது என் தேகமானது

களைத்துபோகிறது என்பின்னாலே வந்தாயேயானால் உன்னை மணம் செய்துக்கொண்டு போகிறேன் இவ்வேளை என்னை மருவி கூடி விளையாடி நீ பின்பு என்பின்னே வருவாய் பெண்ணே.



லக்ஷ்மணாதேவிக்கும் சாம்புவனுக்கும தர்க்கம்-தரு

| | |
|---|---|
| பின்னாலேநான் | வரவோ |
| மன்னாபேசுவது | தீரமோ |
| மன்னமன்னவர்கள் | மண்டலாதிபதிவந்து |
| பணிந்திடும்தந்தையார் | பந்துவை |
| முடுக்கு-மதியாமலே | துதிசெய்திட |
| ததியோகெடுமதியோயிது | பின்னா |

சாம்புவன் தரு

| | |
|---|---|
| பாவையே | ரஞ்சிதமே |
| பெண்ணேபச்சை | பசுங்கிளியே |
| தேவர்பணிந்திடும் | சீதரன்மாயவன் |
| சிந்தைமகிழ்ந்திடும் | மெந்தனென்றெண்ணாமல் |
| முடுக்கு-திடமாமொழி | விடவேயிது |
| அடவோகெதி | படவோததிபாவையே |

லக்ஷ்மணாதேவி தரு

| | |
|---|---|
| கற்றவித்தைகள் | போமோ |
| சுவாமி | கள்ளத்தனமாமே |
| சுத்தபயித்தியம் | கொண்டவரைப்போலே |
| சோதிக்கவேமனம் | வாதிக்கவந்தீரோ |
| முடுக்கு-சுகமாகுமா | நகைமாமொழி |
| வெகுவாகுமோ | தகுமோஇதுகற்றவித் |

சாம்புவதேவன் தரு

கொஞ்சிமகிழ்ந்திடுவா
சுகம்தருவாய் அஞ்சுவதுமுண்டோ
யாருக்குநானினி அட்டிசெய்தாலுன்னை
விட்டு விடு
மூடுக்கு-அறியாமலே பரிசெய்திட
சரியோவதுநெறியோ கொஞ்சி

லக்ஷ்மணுதேவி தரு

சொல்லலாகுமோநாவால் நல்லதல்லவேயிது
நாடுசிறிக்குமேராசனே ஓய்ராசனே சொல்ல

சாம்புவன் தரு

சொல்லச்சொல்லவேயிது நல்லதல்லடிபெண்ணே
ஞாயமறியாயோடி பெண்ணே
அடிகண்ணே சொல்ல

லக்ஷ்மணுதேவி தரு

அரியதென்னமோ உங்களப்பன்
ஆடுமாடுகள் மேய்த்தார்
ஆருமறியாரோ ஓய்ராசனே அரிவ

சாம்புவன் தரு

என்னைப்போலவே நீங்கள் மன்னமன்னவருவீரோ
யீனக்கரையாரடி பெண்ணே
அடிக்கண்ணே என்னைப்

லக்ஷ்மணுதேவி தரு

வந்தார்இடைச்சாதியிலே நொந்தார்கைம்பெண்
மத்தாலேவையகம் மரியாதோ
ஓய்ராஜனே வந்தார்

சாம்புவன் தரு

கைம்பெண்சாதி யால்வந்தஜாதி
உங்கள்ஜாதியடி அந்தநால்வரி
நீயல்லவோபெண்மயே அடிகண்ணே கைம்

லக்ஷ்மணுதேவி

எப்போதும் தப்படிபபார்
உங்களப்பன்தானல்லவோ என்னைபிறட்ட
வேண்டாம்ராஜனே எப்போதும்

சாம்புவன்

கும்பஸ்தனங்கள்ரெண்டும் வம்புசெய்யாமல்தாரும்
கூடியணைந்தாயடிபெண்ணே அடிகண்ணே கும்பஸ்

இடையர் புத்தியைக்காட்டி
மடையத்தனமாய் நீட்டி
என்கிட்டேடவராதேராசனே இடைய

லக்ஷ்மணுதேவி கந்தார்த்தம்

இடறதுபேசவேண்டாம் எனக்குமேசுயம்வரஞ்சாட்டி
அடறவேமன்னர்வந்து அவர்களைமதித்திடாமல்
துடறவும்இந்தசேதி துரைமக்கள்அறிந்தாலிங்கே
இடர்வந்துசேரும் யிட்சணம்யேகுவீரே.

தரு-அதம்செய்யநேரும் இப்பவேபோர்விதம்
கொண்டுபாரும் மதம்கொண்டுமடிந்தவர்
மண்ணி லநேகருண்டு
இந்தவாது யென்மனம்
என்வீணுய்பதைக்கிறீர் அதம்செய்

சாம்புவன் காந்தார்த்தம்

கெட்டியாபேசவந்தாய் கெம்பிரவதியேயுன்னை
கிட்டியேவாரித்தூக்கி கிளம்பியேஇரதத்தைநாடி
அட்டியில்லாமல்யானும் அழகியரதத்திலேற்றி
திட்டெனபரியைத்தட்ட தெரிவையும்புலம்பலானள்.

தரு-தேரதுஒட அதிவேகமாய்
சாரதிசாட தரணிமன்னரும்
தடுத்தாலும் எனைவந்து
சிறணியேயுன்னை திருப்புவதுமுண்டோ தேரது

பொதுவசனம்

இவ்விதமாக சாம்புவதேவன் யனேகதர்க்கம் செய்து முடியாமல் பலவந்தமாக தூக்கி ரதத்தில் வைத்துக்கொண்டு நடக்கிறபோது லக்ஷ்மணுதேவி புலம்புகிறவிதங் காண்க.

லக்ஷ்மணுதேவி விருத்தம்

மன்னமன்னவர்களெல்லாம் வந்துமேதுரியராசன்
தன்னிடமகளென்றெண்ணி சற்றுமேஅஞ்சிடாமல்
என்னையும்ரதத்திலேற்றி யேகினன்சோறத்வமாக
அன்னீதஞ்செய்தசாம்பன் அன்பிதோஅறிகிலேனே.

லக்ஷ்மணுதேவி புலம்பல்-தரு

அய்யோதிருவுளமே மெய்யும்பதருதையோ
அவதிக்கிளன்ஞசெய்வேன் மகாதேவா
மைவிழிமாதர்சூழவந்து பூங்காவனத்திற்

முடுக்கு-வாசவமைந்தனும் பாசமுடனேவந்து
மோசபங்க முடைய
நேசம்கொண்டிடவே யா

அஸ்தினாபுரியையாளும் அரன்தனக்குமிக்க
அருமையாபெண்பிறந்தேன் மகாதேவா
என்சொல்தவராமல்தந்தை எனக்குசுயம்
சாட்டினார்
முடுக்கு-துஷ்டத்தனமாகவந்து பக்ஷிவாகனமைந்தன்
இட்டம்கொண்டே யிந்த
சங்கட்டமுண்டாச்சுதே அய்யோ

ரக்கு
மாறுபங்கம்வந்துதே மகாதேவா
சங்கையாகியமனம் தருக்கவிதியாச்சுதே
முடுக்கு-சாடவேபரிகளும் ஓடவே
ரதமதுயாடிய பாடியபாதனே
வாடவும்தகுமோ அய்யோ

தானே
வந்துப்பிறந்தேன் பாவினன்றே
செய்குவேனையோ மகாதேவா
தந்தைதாய்பந்துக்கள் தடக்கவிதிதந்துதோ
முடுக்கு-தடுத்துரதத்தை ந்விடுத்துவிடு
யெந்தனையடித்திட பரிகுவதெப்படியோஇனி . அய்யோ

சாம்புவதேவன் வசனம்

இந்தப்பிரகாரமாக லட்சுமணாதேவி புலம்பிக்கொண்டுவர அப்போ சாம்புவதேவன் அதிவேகமாக ரதத்தை நடத்துகிறவிதம் எப்படியென்றால்.

சாம்புவதேவன் ரதம்விடுகிற தரு

சந்தோஷமாகரதம் விட்டான்
சாம்புவதேவனும் தன்னுடமனதில் சந்தோஷ
அந்தமுள்ள அத்திபுரமாளும்
அறவத்துவசன் மகளை
சிறையெடுத்துக்கொண்டு சந்தோஷமாக

அஸ்தினாபுரிநகரைத் தாண்டி
ஆறுகுளம் காடுசெடி
அனந்தமும் கடந்து
விஸ்தாரமாகவே பாடி
மெல்லியை சிறையெடுத்து வேகமுடன்போக சந்தோஷ



துவாரகாபுரிநகரை நோக்கி
வெகுதுரிதமுடன் சவுக்காலே
புறவிகளை சாடி
காவலர்கள் வருமுன்னே
முடிகியேசாம்புவனும் கடிகிநடந்தானே சந்தோஷ

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சாம்புவதேவன் லக்ஷ்மணாதேவியை ரதத்தில் யேற்றிக்கொண்டு போகிறசேதியை தாதிமார்கள் திரியோதிரனுக்கு தெரிவிக்கிறவிதம் எப்படியென்றால்.

தாதி வசனம்

சரணம் சரணமையா சுவாமி எங்கள் அரசியாகிய லக்ஷ்மணாதேவியும் நாங்களும் பூங்காவனத்தில் யின்று விளையாடிக்கொண்டிருக்கும்போது துவாரகாபுரிவாசனாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பட்டபு ஸ்திரீகுமாரனான சாம்புவதேவன் பலவந்தமாக லக்ஷ்மணாதேவியை தேரிலேற்றிக்கொண்டு போய்விட்டானையா சுவாமி.

துரியோதிரன் விருத்தம்

ஒருமனதாக ஓடிவந்துரைத்தசேதி
இருசெவிதனில்நாராசம் சொருகிவிட்டதுபோல்யேங்கி

அருமையாயெனக்குதித்த அய்யய்யோமகனேயென்று
தகுமுடி தூரியராசன் தங்கியேபுலம்புவானே.

துரியன் புலம்பல் தரு

அய்யோநானென்ன செய்குவேன்
எந்தன் அருமைமகளுக் கிந்த
குறைவுவந்ததைய அய்யோ
ஒய்யாரமானக் கண்ணே
உனக்குசுயம்வரம் சாட்டி
முடிக்கு-ஓடியுலகமெங்கும் தேடி வரச்சொல்ல
கோடி கோடியாய்மன்னர் ஓடி வந்திணங்கிட அய்யோ
கண்ணேநான் யென்னசெய்வேன்
நல்லகந்தமும் பெரிய
சுந்தரவடிவுள்ள கண்ணே
விண்ணிலொருவருக்கும் மகிழ்ந்துதந்திடும்முன்னே
முடிக்கு-பானேயிடையனை மகன் தானே
யுனையெடுத்துப்போன விதிக்
கெப்படிநானெப்படி துணிவேன கண்ணே
பொன்னே பூங்கிளியே மயிலே
உன்னைப்பிடித்துக் கொண்டு
ரதம்நடத்திட விதியோ தெண்ணே
பூமியில்ஒருவருக்கு புகழ்ந்துகொடுக்குமுன்னே
முடிக்கு-போருமுடித்து மனம்
சீராதவிக்கு தையோ
வாராஇப்படிக்கொத்த நேராபங்கம்
வந்துதே பெண்ணே
மாமாசகுனி நமக்குபங்கம்
சிந்தைகலங்கிடவே மாமாசகுனி
பூமாதவமிருந்து பெருமைமிகுத்த கண்ணே
முடிக்கு-போருமுடித்துமனம் சீராதவிக்குதையா
யாராலேயாகுமிந்த அய்யோவிதியடக்க மாமாசகுனி

துரியன் விருத்தம்

என்னுடையசகோதரனே சகுனிகர்ண
இடக்குலத்தில்வந்துதித்த மாயன்மைந்தன்
தந்தைமதிக்குரியதாக வந்தபையல்
தரணிபதிஎன்றுநம்மை மதித்திடாமல்
வந்துஎந்தன்செல்வீதனைத் திருடிப்போன
வல்லமையைக்கண்டுநான் அறியவேண்டும்
சொந்தமுட்டைபடையெடுத்து சண்டைக்கேகி
செல்லுவோம்நாமவனை வெல்லுவோமே.

'யன் வசனம்

வாரும் கர்னமகாராசனே மாமாசகுனி வெண்ணைத்திருடி கள்ளனென்றும் உலகமெல்லாம் பேர்படைத்தவனுடைய பிள்ளைக்கி இப்படிப்பட்ட திருட்டுப்புத்திநேரிட்டது பார்த்தியா கொஞ்சமாவது அச்சம் பயம் இல்லாமற்படிக்கு நம்மையும் மதிக்காமல் நமது புத்திரியை கள்ளம்செய்துக் கொண்டுபோன பையலை உடனே பின்னாலே போய் அவனைப்பிடித்து தேர்க்காலில் கட்டிக் கொண்டுவந்து சிறைச்சாலையில் அடைக்கவேண்டும் என்பின்னாலே வாருங்கள் இராஜாதிபதிகளே.

துரியன் சாம்புவனைப் பிடிக்கப்போகிற தரு

அண்டரெண்டமும் நடுநடுங்க
படையை காட்டுவேன்
அடியிலேகி அவனையும்மொரு நொடியில் வாட்டுவேன்
கண்டுமவனை கசக்கியே காத்தில் தூத்துவேன்
சாலனுக்கிரையாக அவனைக்கண்டால்மோதுவேன்
தந்தைதமதியை கொண்டுவந்த
தருதலைப்பயலே சதைசதையாபிச்சியெறிவேன்
நமதுபெண்ணை எந்தமதியால்
அரக்ஷணத்திலே யெடுக்கத்துணிந்தானோ
ஈரேழுலகம்நடுநடுங்கவே என்பேர்சொல்லவே
குலத்துவண்மையை யறிந்திடாமல்
குதித்து வந்தானே
கொஞ்சமாகிலும் பயமில்லாமல்
பெண்ணையெடுத் தானே
சலத்திலோடிபதுங்கினாலும் நான்விடுவேனோ
அவன்தந்தையோடி வந்தபோதிலும்
சமர்த்துவெல்லுமோ சகுனிமாமா
தம்பிமாரேசனுதில் வாருங்கள்
தனிரதத்தைமுடுக்கிக்கொண்டு போறான்பாருங்கள்
அவனைதகுந்தசிஷ்டைசெய்திடாமல்நான்விடுவேனோ
சண்டைசெய்யவேண்டாம் நீங்கள்
நின்றுபாருங்கள் அண்டரண்ட

துரியோதனன் விருத்தம்

வஞ்சியைதிருடிக்கொண்டு மகிக்ஷியாய்தேரைவிட்டு
அஞ்சியேஓடினாலும் யாருயிர்பிழைப்பதுண்டோ
மிஞ்சியபயலேஉன்னை வில்வளைத்தொருநொடிக்குள்
பஞ்சுபஞ்சாகவாட்டி பகைமுடித்திடுவேன்பாராய்.

வ-ம். அடா வாடா பயலே மண்டலாதிபதி என்றும் சற்று கிலும் பயமில்லாமல் பெண்ணைத் திருடிக்கொண்டு போகிறாயல்ல வா நீ எங்களைக்கண்டு தேரைவிட்டு கீழே குதித்தோடினாலும் பிழைப்பதுண்டோடா உன்னை ஒருநொடியில் பஞ்சுபோல் பறக் கடிக்கிறேன் பாரடா பயலே.

தூரியனுக்கும் சாம்புவதேவனுக்கும் சண்டை-சாம்புவன் தரு

இலங்கைராவணன் சேனைபோல்வந்தாய்
மிஞ்சிஎளியவனல்லநானு மதற்கு
துஞ்சிடதளங்களைபொடிபட வாட்டுவேன்
சவுரியபுஜபலங் காட்டுவேன்
முடுக்கு-தண்டனைசெய்யவே கண்டுமே
யெந்தனைகெண்டியோ தனுகறம்
மண்டலமரியவே இலங்கை

தூரியன் தரு

இடைகுலத்திலே வந்திடும்
நீசிறுப் பையலே
எடுக்கவந்தயோகுரு குலமணிதையலே
முடுக்கு-துடிக்கஉன் தலைசாடுவேன்
துண்டித்தே உயிர்போக்குவேன்
சுக்கசுக்க லாகவேயுன்
தலைகக்கவே யுன்திறம்
திக்கிடசெய்குவேன் இடைகுலத்தி

சாம்புவன் தரு

மதிகுலத்தினில் வந்திடும் மதிபதிராசனே
வல்லமைதன்னை யெண்ணியேபாரும் உன்யோசனை
குதிக்கஉன்தலை சாடுவேன்
கொடியதுண்டாய் போடுவேன்
முடுக்கு-குஞ்சறபரிமள மிஞ்சியரதமுடன்
பஞ்சுபஞ் சாகவே
மிஞ்சியடிக்கிறேன் மதிகுலத்தினில்

தூரியன் தரு

தடுத்துமென்னிடசவுரிய புஜபலம்கண்டுமே
சற்றுமஞ் சாமலே
தந்தைபுத்திியை கொண்டுமே
நகைக்கருபியை எடுத்துமே
நமனுக்கேயுயிர் கொடுக்கவே
முடுக்கு-நடுங்கவே தேவரும்
கொடுங்கணை பூட்டிய
ஒடுங்கவேயுன்மதம் அடங்கிடவிடுத்தேன் தடுத்து

சாம்புவன் விருத்தம்

பதமரியாமல்மிக்க பலமுள்ளராஜதீரா
இரதகஜதுரகமுள்ள ராணுவம்தன்னைக்கூட்டி
இதமறியாமல்வந்து எதிர்த்திடும்படைகளெல்லாம்
அதமதுசெய்வேனென்று மரிந்துமேயேகுவாயே.

வ-ம். அகோவாருங்கள் இராஜர்களே! ஏது நீங்கள் என்னுடைய பலமரியாமற்படிக்கு சேனைகளைக் கூட்டிக்கொண்டுவந்து எதிர்த்தா யல்லவா இவர்களையெல்லாம் அதம்செய்யப்பட்டவல்லவனென்று அறிந்து நீங்கள் விலகிப்பிழையுங்கள் இராஜர்களே.



தூரியன் சாம்புவன் தர்க்கம்-தூரியன் தரு

பெண்ணை கன்னம் செய்வதேதடா
என்குலமும்கெட்டு நலமதுகொண்டுமே
பேசவந்ததென்ன வாதடா
அண்டபுவனமெல்லாம் யரியாயோ எங்கள்வீரம்
கண்டறிந்து இடப்புத்தியை
காட்டிகுதிக்காதே சும்மா
முடுக்கு-காட்டுவானேதிறம் பூட்டுவேனேசரம்
கண்டதுண்டமுடன் தெண்டனைசெய்குவேன் பெண்ணை

சாம்புவன் தரு

என்குலத்தை எண்ணிப்பார்க்கவே
அதுநேறமில்லாமலே கூறவுமெளிதாய் என்குல

.. .. முகத்தின்பழுதை எடுத்துச்சொல்லியநாவை
இழுத்துஇருதுண்டாய் யழித்துஅருத்தெரிவேன்
முடுக்கு-எடுத்திடுவேன் சிலைமுறித்திடுவேன்
இறக்கியொடுக்கி சறம்முடுக்கினேன்பாராய் என்குல

சூரியன்

மாட்டுக்காற பையலல்லவோநீ
எவர்களு மரியவே
சவுரியப் பேசிவந்து சொல்ல
வெட்க மில்லையோ
நாட்டுக்கதிகாரஞ் சொல்லும்
ராசராசேந்திரனென்றும் ராச்சியம்மரியாதோ
சாட்சிசொல்லவும் வேண்டுமோ
முடுக்கு-தாக்குவேன் பாணம்நீக்குவேன்
சினம்தட்டிகிட்டியேவெட்டியேஎரிவேன் மாட்டுக்

சாம்புவன்

அத்தர்சித்தர் தேவரஞ்சவே
வந்திடும்அரிதிருமைந்த னென்றுமே
அறியாமல்வார்த்தை மிஞ்சவே
சித்தமதுதத்தளிக்க சினம்கொண்டேன்
உச்சிதமாகசத்தக்கடல் சூழுமிந்த
தாரணியெங்கும் நடுங்க
முடுக்கு-தாக்குவேன் அதமாக்குவேனே
சத்ததண்டையும் கொடியினிலடிபட அத்தர்

சூரியன் விருத்தம்

கெட்டியாபேசவந்தஉன் கெருவத்தையடக்கவேண்டி
கொட்டியேசறங்கள்கோடி கொடியிடைவிருதுஎல்லாம்
வெட்டியேசாயத்தள்ளி வெகுண்டுமேபயலேஉன்னை
கட்டியேபிடித்துக்கொண்டேன் கடும்சிறைபோடத்தானே.

வ-ம். அடாவாடாபயலே என்னைமதியாமல் மகாதயிரிய மாகப் பேசவந்தாய் என்று சாம்புவதேவனைப் பிடித்து கொடிக் கம்பத்தில் கட்டிக்கொண்டு போகும்போது சாம்புவன் புலம்புகிற விதங்காண்க.

சாம்புதேவன்-புலம்பல்-தரு

இந்தவிதிஎனக்கு வந்ததோ
மகாதேவா யீசாசர்வேசா
நான்என்ன செய்வேன்
இந்தசூரிய ராசன்

தந்தபெண்ணுக் கிச்சையாகி
தண்டுடன்ராசன் ராசன்வந்து
என்னைக்கட்டிபிடிக்கவிதியோ இந்தவிதி

யன் தரு

முடிக்கு-பெண்ணைத்திருட வந்தாய்
மெள்ளவே
பிடித்துக்கட்டிக் கொண்டு
தள்ளவே எங்கும்விள்ளவே
சிறைக் குள்ளவே
மண்ணைக்கவ்விக் கொள்ளவே
செவ்வையாய்கட்டுங்கோள் பெண்ணைத்தி

சாம்புவன் தரு

அடித்ததில்லையே எந்தன்
அருமைதாய் தந்தையும்
அடிப்பட விதியாச்சே
என்னுசெய் வேன்
ஆசையாகமிஞ்சி பெண்ணை
நேசமாகி நாடெனடுக்க
தேசமெல்லாம்நகைக்க வந்த
தீவினைக்குஎன்னசெய்வேன் அடித்த

துரியன் தரு

அதிவீரசூரரே கட்டுங்கோள்
யவனையசையாமல் பின்கட்டாய்கட்டுங்கோள்
யோங்கிநெட்டுங் கோள்
சும்மாதிட்டுங் கோள்
வாளால்வெட்டுங் கோள்
நெட்டிநெட்டியே சிறையிட்டுமே
வையுங்கோள் அதிவீரசூர

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக துரியோதனன் சாம்புவதேவனை சிறையில் வைத்து இருக்கும்போது அப்போ துவாரகாபுரி வாசராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கொலுவுக்குவருகிறவிதம் எப்படியென்றால்.

கிருஷ்ணமூர்த்தி கொலுவிருத்தம்

வேதனுமாயசிந்து விண்ணவற்கமுதுதந்த
மாயவன் கமலகண்ணன் வையகமுண்டநாதன்
ஆதரவானசோதி அலைகடல்அமர்ந்தமூர்த்தி
சீதரமாயகிருஷ்ண தேவரும்வருகின்றரே.



கிருஷ்ணன் தரு

பாற்கடல் ஆலிலைமேற்
பள்ளிக்கொண் டருளிய
பச்சைவடிமேனியனும் நானே
திருவலாகமிஞ்சியே பக்தரக்ஷகனானே
போர்க்கஞ்சா சூரர்களை
யெங்குமதம் அழித்தவன்
புவியில்என்னைப் பழித்த
கிழித்தேன்
பூமியை உண்டேன்
சொந்தமாமனை கொன்றேன்

முடுக்கு-சுரமுகாநஞ்சிய மனுமானேன்
பூமியளந்திடவாமனமானேன் பாற்கடல்
பஞ்சாயுதம் தரித்து
மிஞ்சிளனைப்போல் வந்த
பவுண்டிகனையும் மடித்தேன்
பூதகிபாலை துவண்டவன்போலேகுடித்தேன்
கஞ்சன்தன் விடுத்த
குஞ்சரத்தை கெடுத்தேன
கன்றைஎடுத்துவிளாங்கனி சிறவடித்தேன்
கண்டவரஞ்ச கொடிகொண்டவர்மிஞ்ச

முடுக்கு-அண்டரெண்டமும் குஷ்டியில்கொண்டுமே
கொண்டவர்கள்தீவினை இன்றுமே
தீர்த்தேன் பாற்கடல்

உரியில் தயிர்பால் வெண்ணை
பரிவாய்மனம் களித்தேன்
யுண்டுமனையை யடுத்தேன்
கோவலைமாதரை கண்டு
இன்பமும் கொடுத்தேன்
துரியனுக்கு நேமித்த
சுபத்திரையைத் தடுத்தேண
சொல்லும் விசையனுக்கு
தந்திரத்திறு லளித்தேன்
சூதனும்நானே ஜெகநாதனும்நானே
முடுக்கு-பாதகர் தங்களை
வாதுடன் வெல்லுவேன்
காதகமன்னரே நீதியால்வெல்வேன் பாற்கடல்

மறுத்துவெகு வீரர்கதி
உதுத்துவந்தோரை யெல்லாம்
மண்ணிலரைய தாக்கினேன்
அவராவியையழித்து விண்ணிலுயிரைபோக்கினேன்
துதித்தகோவியனூரில் சாலைநகரத்தின் வாசன்
துய்யவன்னிய குலம்
இரங்கையன் தந்த நேசன்
குத்தனு கூலன்
யெங்கும்பேர்பெற்றிடும் பாலன்
முடுக்கு-நத்தியே என்பதம்
கற்றவர்கூற மெத்தவேசுற்றம்
பெற்றுமேவாழ்க பாற்கடல்

கிருஷ்ணசுவாமிகொலுவு பொதுவிருத்தம்

மறைமுதலைத்தும்வாழ்க மானிலமெல்லாம்வாழ்க
தாரணிதன்னிலன்பாய் சதாகாலம்தழைத்துவாழ்க
முறைமுறையாகவந்த முடிமன்னர்பணிந்துசூழ
தாற்புகழ்தம்பிசூழ சகலரும்கொலுவானோமே.

வ-ம். கேளும் மாதவா ஆகம வேத புராண சாஸ்திர முதலானதும் உலகசாந்தமும் சுபக்ஷேமமும் யொருந்திவாழக்கடவது. என தமையன் முதலான மன்னமன்னரும் சூழும்படி கொலுவ தாகினோம்.

பொது வசனம்

இந்தப்பிரகாரம் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் கொலுவாயிருக்க அப்போது நாரதமகாமுனி கிருஷ்ணமூர்த்தியை காணும்படி கொலுவுக்கு வருகிறவிதம் காண்க.

## நாரதர் விருத்தம்

வேதனும்மனங்களிக்க விளங்குவெண்ணீறுபூசி
பாதகன்சிறையில்வைத்த பரிவுள்ளசாம்புவதேவன்
சேதியையுரைக்கவேண்டி திருத்துவாரகையைநோக்கி
நாதனைக்காண அன்பாய் நாரதர்வருகின்றாரே.



## நாரதர் தரு

நீண்டசடை முடிந்து
நெற்றியில்வெண்ணீ றணிந்து
தாண்டியே நடைநடந்து
தவமுனி வந்தார்

கைதனில்வீணையு மேந்தி
காவிகாம்பரம் பூண்டு
கண்டவர்தனை துதிக்கும்
நாரதமாமுனி வந்தார்

செவியில்குழைத் துவங்க
சித்திரக்களபும் வீச
நவநீதமாயன் பக்கம்
நாரதர் வந்தார்

பாதகத் துரியராசன்
பாலனைசிறையில்வைத்த சேதியை
யுரைக்க வேண்டி
சீக்கிரம் வந்தார்

கிருஷ்ணன் விருத்தம்

நானிலம்மதிக்கவந்த நாரதமுனியேகேளாய்
வானிலந்தன்னைவிட்டு வலக்கையில்வீணையேந்தி
மானிலமன்னர்சூழ்ந்து மருவியசபைக்கிப்போது
தானுவேவந்தசேதி சங்கதியுரைசெய்வாயே.

ணன் வசனம்

வாரும் நாரதமாமுனியே நீர் நமது சமூகந் தேடிவந்த சமாச்சாரம் தெரியும்படி சொல்லும் நாரதமுனிவரே.

நாரதர் தரு

கேளாயா
அரிவாசுதேவா வந்தசேதி
வந்தசேதிதன்னைக் கேளும்
சந்திரவம்மிஷத் யன்
தந்தலட்சுமணா
மன்னன்சுயம்நாட்டினன் வந்தசேதி
F மனன ரறிய
தெரியநிருபம் சாட்டி
ராசராசரும் வந்து
கவியகொடிநாட்டி
நம்மிடமைந்தனும் வந்தசேதியறிய
முடுக்கு-மதித்திடாமலே மாதுலக்ஷ்மணாதேவி
ிக்கவே ஓடியெடுக்கவே
ிலந்தி பூங்காவைக்கடந்துமே
நாடவும்சேதி வாடவும்கண்டு வந்தசேதி
குருகுலமன்னர்வந்து வந்து
கூடிப்பிடித்துக் கொண்டு
கொடிதாகமபத்தியே கொண்டு
இருக்கிக் கட்டி
முடிக்கு-கொண்டுசாம்புவனும் கண்டு
தவிக்கஉருகவே மனம்
சிறையிலடைக்க வந்தசேதி

நாரதர் வசனம்

கேளுமையா சுவாமி பகவானே தங்கள் குமாரனாகிய சாம்புவ தேவன் துரியோதனன் குமாரத்தியாகிய லக்ஷ்மணாதேவியை பூங்காவனத்திலே விளையாடிக்கொண்டிருக்கும்போது சாம்புவ தேவன் இரதத்தில் யேற்றிப்போகவும் துரியோதனனானவன் கண்டு பிடித்து ரதக்கொடிக்கம்பத்தில் கட்டிக்கொண்டுபோய் சிறையில் அடைத்தான். அந்தச்சேதியை தங்களுக்குத் தெரிவிக்கும்படி வந்தேனையா சுவாமி.

கிருஷ்ணன் விருத்தம்

இப்படிக்குநாரதரும் கூறக்கேட்டு
இருவிழியும்பொறிபறக்க கோபமாகி
எப்படிக்குஎன்மகனை சிறையில்வைப்பான்
எதிரிபலம்அறியானோ துரியன்தானும்
இப்பொழுதுநானுமே அவ்விடமேயேகி
எமனுலகம்அவனுயிரை யேகச்செய்வேன்
அப்படியாவென்றுசொல்லி கிருஷ்ணதேவர்
ஆக்கிரமித்துசிலவசன முரைக்கின்றாரே.

கிருஷ்ணன் தரு

இத்தனைக்கெருவம் கொண்டானோ
பிடித்திட மைந்தனை
அடைத்திட சிறையில்
எங்கள்வீரியம் கண்டானோ
சத்தம்கேட்ட வுடனே
தனையனைவிட்டா லாச்சி
தடுத்தொழி வார்த்தைகள்
எடுத்துசொல்லப் போகுமோ
முடுக்கு-சகலரு மரியவே
நகரையடிப் பேன்
அகமதி லெண்ணியே
பகையைநான்முடிப்பேன் இத்தனை
வல்லமையறிந்த தில்லையோ
பொடிபட கவுறவாள்

படைகளை வதைக்க
எனக்கு தொல்லையோ
எல்லையில்லவ ரொன்றாலும்
எதிர்த்தும்பசுவா ருண்டோ
இப்படி செய்யும்
குலயீனபுத்தியைக் கொண்டு
முடுக்கு-இருக்கிறஅவனிட செருக்கையறுப்பேன்
நெருக்கியபடை எல்லாம்
சுரிக்கினிலொழிப்பேன் இத்தனைக்

பஞ்சவர்தனைப் பகைத்தவன்
நல்லகொடுமை யில்மிகுதியைகெடுமதிகொண்டு
பாதகன்சூதில் மிகுந்தவன்
வஞ்சகனிவ னென்றுமே
வையகமறிந்த தூண்டு
மதிக்கும் உலகமெங்கும்
க்கஇப்பவே கண்டு
முடுக்கு-மண்டியே அவனுடன்
சண்டை தொடுப்பேன்
எண்டிசை நடுங்கவே
தண்டமெடுப்பேன் இத்தனைக்

தளசேகரத்தை கூட்டுவேன்
எதிர்வந் திடும்
படைகளைசிந்து சிந்தாக
தடுத்துப்போராடி வாட்டுவேன்
அளவில்லாநெடுங் கீர்த்தி
அழியஅதமாக்கு வேன்
ளெல்லாம்
யாட தாக்குவேன்
முடுக்கு-அறியவே யானும்
தூரியனை கொல்வேன்
பெரியவ ரெவரையும்
பரிவுடன்வெல்வேன் இத்தனை

ஷ்ணன் விருத்தம்

நீடிய உலகமெங்கும் நிகரில்லாமாயனென்றும
கொடியவன் தூரியன் தன்னை கொஞ்சமுமதித்திடாமல்
நொடியினிலவனைக்கொல்ல படைதனையெடுக்கவேண்டும்
வடிவான சாம்புவதிதன்னை விரைவுடன் வரச்செய்வாயே.

வசனம்

கேளும் பிள்ளாய் மாதலி நீண்ட புலகாதியந்தமும் நிகரில்லா மாயனென்றும் பிரகாசிக்கும் தன்மையை கொஞ்சமாவது எண்ணிப் பாராமல் அறியாத சிறுவனை சிறையில்வைத்திருக்கும் தூரியோதிரன் மீது படையெடுத்து போகவேண்டியதா யிருக்கிறது இந்த சேதியைத் தெரிவிக்கவேண்டியது அரண்மனையில் இருக்கும் என்தேவியாகிய சாம்புவதியை அழைத்துவாரும் பிள்ளாய்மாதலி.



பொது வசனம்.

இந்தப்பிரகாரமாக கிருஷ்ணமூர்த்தி தேவியாகிய சாம்புவதி பம்மன் தன் நாயகனை காணும்படி சபையைநாடி கொலுவுக்கு வருகிற விதங்காண்க.

சாம்புவதி விருத்தம்

அடவுடன் சகிமாரோடி அறிவித்த சேதிகேட்டு
திடமுடன் எழுந்திருந்து சீர்பணி யலங்கரித்து
நடனசல் லாபரூபி நாயகன் தன்னைக்கான
மடமயி லானசாம்பு வதியிதோ வருகின்றாளே.

## சாம்புவதி தரு

வந்தாள் சாம்புவதேவி
ஒய்யாரமாக வாராள்
சாம்புவதேவிவந்தாள் சாம்புவதேவி
இந்திராதியோர் வணங்க
முடுக்கு - வாசவனுமதி நேசமுடன் வர
பாசமிகுத் திட
நேசவலங்காதி வந்தாள்

தங்கசரிகைசேலை மின்ன
இடைவடி வாதரிக்க
ஒட்டியாணம் சோதிதுன்ன
செங்கைகடக மின்ன
அங்கம்பளப ளென்ன
முடுக்கு - சீருடனேவெகு நேருடனே
யொளிபெருட னெவரும்
கொத்துமுத்து வந்தாள்

நல்லசூடிய மாமலர்
கொண்டைவண்டிசை பாடவே
சத்தத்தண்ட கொலு
சத்திக்கலக லென்ன
முடுக்கு - காரணிமேலெவெடி சிறணி என்ன
சிதைகாரணி மெச்சிவாரணி யென்ன வந்தாள்

கரடிக்கராசன் தந்த வஞ்சி
விநோதமாககனிவரக் கிளியெனவே
கொஞ்சிகிறீட மைத்துனனை
கெருடத்துவசத ராஜன்
முடுக்கு - சிதமுடனேவரும் பாக்யமுடையவனும்
வாதையுடன்மகன் சேதியைக்காண வந்தாள்

## சாம்புவதி விருத்தம்

வந்தசாம்புவதியுமிங்கே மாயனார் சமுகம்சென்று
சிந்தையில்மகிட்சியாகி திருவடிதனில்பணிந்து
எந்தனையழைத்தசேதி இன்னதென்றறியவேண்டி
சந்தோஷமாகவேதான் சதிருடன்கேட்கின்றாளே.

## சாம்புவதி வசனம்

சரணம் சரணமையா சுவாமி பிராணநாயகரே தேவரீருடைய திருவடி பொற்பாதகமலங்களுக்கு அடியாள் அநேகவந்தனம் அடியாள் அரண்மனையில் இருந்த என்னை ஏதுகாரியமாக இந்த

யைக்கு வரவழைத்தீர் தெரியும்படி திருவுளம்பற்றி யருளவேண்டும் கர்த்தியனே.





சாம்புவதி தாக்கம் தரு

நாதாவேணு நீதா
அரி அரி பரந் தாமா
ஸ்ரீதாமோதரனே யுந்தன
ஸ்ரீபாதமே யான் சரணம்
முடிக்கு - சிறையி லென்பாக
எந்தனை யழைத்ததை
விந்தைய உரைசெய்வீர்
நந்தாருகுந்தனே நாதா

கிருஷ்ணன் தரு

மதியே சாம்புவதியே
பெண்ணே மயிலே
கருங்குயிலொடு நிரதிபோலே
துலங்கசுகம் பொருவாய்
முடிக்கு - சோதியே மாமணி நீதியே
உன்மகன்சேதி கேட்டியோ
கோதிலாமணி மதியேசா

சாம்புவதி தரு

கண்ணே மேக வண்ணா
சிவகாமி சகோதரனே

நண்ணுமண குண்ணுமலே
நாதா கனயோகா
முடுக்கு - நாட்டியே காட்டியே
சேதியை கேட்டது மில்லேயோ
வாட்டமுடன் மன்னு கண்ணு

கிருஷ்ணன் தரு

துரியன் பெண்ணை பரிவாயோடி
துடுக்காமன் எடுக்க
பெரியமன்னர் தெரிந்துவந்து பிடித்தார்
சிறையடைத் தார்
முடுக்கு - பொதுவாகவே நாரதர்வந்துமே
சீறது கூறவே
போராது செய்வேன் துரியன்

சாம்புவதி கொச்சகம்

பாலபசுங்கிளியே பஞ்சவர்ண ரஞ்சிதமே
மேலாதவம்புரிந்து வீறியனைப்பெற்றெடுத்தேன்
கோலாகலம்நடத்தி கொற்றவரும்பத்தியுன்னை
சிலாசிறையில்வைக்க சிவன்செயலோ என்னுசெய்வேன்.

வசனம்

அய்யோ என்செல்வக்கண்மணியே உன்னை அனேகமாக தவம்செய்து பெற்றுவளர்த்தேனே பாவியாகிய துரியோதனன எவ்விதமாக அடித்து சிறையில்வைத்தானே இனி என்ன செய்கு வேனப்பா என் குமார செல்வமே.

சாம்புவதி புலம்பல் தரு

பாசமாகவே பெற்றுவளர்த்த
பாவிநான் தவிக்க
மனம் பதைக்க
தேசம் நகைக்க
பாலனே திவ்வியலோலனே
எந்தன சீலனே என்னவேலைகள் செய்தாயோ
கவுறவக்குலத் துரியன்
பெண்ணைக்கண்டுநீ எடுக்க
உடல்நடுங்க மனம்பதைக்க
கட்டவோபாலா திட்டவோ
என்னு என்னு கோஷ்டங்கள்
செய்தோயோடா மகனே

இந்தவயதில் சிறையிருக்கவும்
எழுதின விதியோ
விதூசதியோ நல்லகதியோமகனே
எப்படி உனக்கிப்படிவர
ஒப்பில்லா பாலா
அப்பனேயென்செய்வேன் பாசமாக

வையகத்திலே வேண்டிய
பெண்கள் மகனே
இல்லையோஎன்று தொல்லையோ
குறவில்லையோ மகனே
மைந்தனைவெ சிந்தனை
இப்போவந்தே என்செய்வேன் பாசமாக

கிருஷ்ணன் விருத்தம்

மைந்தனைக்குறித்துசாம்புவதியே நீபுலம்பவேண்டாம்
எந்தனைமதித்திடாமல் யிடர்செய்ததூரியன்தன்னை
அந்தகணபதியேசேர்ந்து அழகுள்ளநமதுமைந்தன்
சிந்தையும்மகிழச்செய்து சீக்கிரம்வருகுவேனே.

வசனம்

கேளும் பெண்ணே சாம்புவதியே மைந்தனைக்குறித்து விசனப்படவேண்டாம் என்னையும் மதியாமல் இடர்செய்த தூரியன் தன்னை அதம்செய்து புத்திரனை இட்டுக்கொண்டு வருகிறேன் எனக்கு விடை தந்து அனுப்பிவிட்டு நீர் அரண்மனை சேரும் பெண்ணே பிராணநாயகி.

சாம்புவதிக்கும் கிருஷ்ணனுக்கும் தர்க்கம்

சாம்புவதி தரு

தேவாஇதுஎன்ற நீதியோ
திருமகனைஎதிர்க்க தேவா
மேலாகவீரியம் கொண்டு
வீண்பழி போகலாமோ
முடிக்கு-விடுத்திடும் நானுமே
யடுத்துமே யவர்களை
யெடுத்துமே நலம்
படித்துமேவருகிற தேவாஇது

கிருஷ்ணன் தரு

மாதே நீ போகலாகுமோ
அந்தகபடவஞ்சகன்முன்னே மாதே நீ
ஏதேதுநல்லமொழியெடுத்து சொன்னபோதிலும்

முடுக்கு-இணக்கமறியாமன்னன் வணக்கம்படுவதுண்டோ
பிணக்கென்று நாய்வாலை
குணங்கெடுக்கப்போமோ மாதே நீ

சாம்புவதி தரு

ராஜராஜனைக் கண்டுமே
மனமிதங்கவேவசனம்பேசி ராஜராஜ
தேசமரியமன்னனை சிறைபிடிப்பிடி நான்வந்தாலே
முடுக்கு-சித்தமகிழ்ந்துமே ஒக்கவாழ்ந்திருப்பது
மெத்தநலமல்லவோ சர்த்தனைபாரும் ராஜராஜ

கிருஷ்ணன் தரு

மானேமனதுகலங்கிடி கனவந்சகத்தூரியன் மானே
நானேசிக்குறிக்கொண்டு நறிக்கும்படைக்காமலே
முடுக்கு-நகருவதுண்டோ போடி
பகரும வசனத்தாலே
அகனும்பெணங்கவே சகலரும்மறியவே மானே

சாம்புவதி விருத்தம்

சரியமேனியரேக்கும் சுடுங்கோபமாகச்சென்று
தூரியன்மேல்சண்டைசெய்தால் செகத்துள்ளோர்கதைப்பார
சொன்னேன்மாமகன்தனை யடிக்கவசனமும்பதுவாசொல்லி
அருமையென்புத்திரன்தன்னை யழைத்துநான்வருகின்றேனே

வசனம்

கேளும் எனதுபிராணநாயகரே தேவரீர் மருமகன்பேரில் போருக்குப்போவது சரியல்ல உலகத்துக்கு பழிப்பாகும் ஆகையால் தூரியராஜனையடித்து அவருக்குவேண்டிய விதிமதிகளைச் சொல்லி மகனை சிறைபிடித்துக்கொண்டு வருகிறேன் விடை கொடுத்து அனுப்பும் பிராணநாயகரே.

கிருஷ்ணன் வசனம்

அப்படியே உன்மனதுபோலவே போய்வாரும் பிராணநாயகி

பொது வசனம்

இந்தப்பிரகாரம் சாம்புவதி விடைபெற்றுக்கொண்டு தாதிமார் புடைசூழ பல்லக்கிலேறிக்கொண்டு அஸ்தினபுரிக்கு வருகிற விதங்காண்க.

சாம்புவதி தரு

அச்சுதன் மனம்களித்து
அன்பாய் விடைகொடுக்க
உச்சிதசாம்புவதியம்மன் உத்தமிவந்தாள்
சித்தமதுகலங்கி செல்வனாலே

மணம்தயங்கிரத்தின          சிவிகையேறிசாம்புவதி
நாயகி          தானடந்தாள்
பட்டணமும கடந்தாகலை          பாரவனங்கடந்து
நட்டளையாத்தாயன்          மகாராஜன்
மணதரிய அஸ்திரை          புரியைக்கண்டு
அம்மன் அழகு          சிவிகைவிட்டு
விஸ்தாரமாக          கொலுகண்டு
மெல்லியுந்          தானடந்தாள்

தாரியன் வணக்கம்

விருத்தம்

பூமியோர் புகழும் புண்ணியவதியே
நேமியோ றடியாய் நிருப னுமளந்த
மாமியே யுந்தன் மலரடி பாதந்
தாவியேவந்த சங்கதியுரைப்பீர்

வசனம

சரணம் சரணம் மாமியே இப்போது நீர் வந்த சங்கதியை சொல்லும் மாமியே.




சாம்புவதி [illegible]

திங்கள்குலமால்மருகா          தீரனேகெம்பீரனே
தேசனே          விசுவாசனே

நீமகாராஜனே நீவாழ்குவாய்
எங்கள்குலம் வேருகுலம் எண்ணி
இச்சைவைத்த தாருமோ
யேகனேவைபோகனே வைபோகனேனன்
னேகமன தாருமோ திங்கள்

சூரியன் தரு

மங்களைத்துவாறகை வாகினிபிரகாசினி
வாடிமனைநாடிவற கோடிதவம்செய்தேனே
உங்கள்குலபுத்திதன்னை உதவாதாருமோ
யோசனைசெய் நேசனிந்தமோசஞ்
செய்யப்போருமோ மங்களை

சாம்புவதி தரு

பிள்ளையதுசெய்தகுற்றம் பேசவேநீகூசவே
பேதமாயன்னிதமாக வார்த்தைவெய்யலாகுமோ
உள்ளமிகவாடிநொந்தேன் ஒடியன்னைத்தேடியே
உந்தனுக்குறவாகாது மைந்தனை
சிறைநீக்குவாய் பிள்ளையது

சூரியன் தரு

சொல்லவந்தாய் நல்லவார்த்தை
துஷ்டமகன்மீதி லிஷ்டமாய்
துஷ்டனைத்தெண்டனை செய்யாமல்
கொண்டுசிறை விடுவனே
அல்லவாகிவாட வேண்டாம்
அப்புறஞ்சே ரிப்பவே
அந்தமாயன்வந்து சமர்தந்த
போதிலும்விடுவேனே சொல்ல

சூரியன் விருத்தம்

நல்லயோசனை நீசொன்னய் ராச்சியம்நடுங்குமெந்தன்
வல்லமை தெரிந்திருந்தும் மதியாமல் இங்குவந்து
செல்வியைத் திருடிச்சென்ற திருடனை சிறையில்வைத்தேன்
மல்லுசெய்யாமலிங்கே வந்தாலும் விடவேமாட்டேன்.

யன் வசனம

கேளும் எனதுமாமியாரே இந்த அவனி 56-தேசமும் என் பரைச்சொன்னால் நடுங்கும்படியான அதிகாரந் தெரிந்திருந்தும் எவ்வளவும் பயப்படாமல் இவ்விடம்வந்து என்குமாரத்தியை திருடிக்கொண்டுபோன துர்மார்க்கனை ஒருபோதும் விடமாட்டேன் மி.

சாம்புவதி தர்க்கம் தரு

மருகனேஎன்மீதில் வர்மம்வையாதே
அருமைஎன்புத்திரனை அனுப்புவாய்நீயே மருகனே

தூரியன் தரு

அனுப்பமாட்டேனனும் அகங்கொண்டபையலை
நினைப்பைமறந்து நில்லாதேபோவா அனுப்ப

சாம்புவதி தரு

போவாயென்றுமே பிடிவாதம்
பேசாதேபேசாதே வார்த்தைகள்
வீண்பழிவந்திடும் போவாயென்

தூரியன் தரு

பழிவந்துஎங்களை பண்ணுமென்றெண்ணுருய்
அழிவதுநீங்களேஅறிந்துபோமாமி பழிவந்

சாம்புவதி தரு

மாமிஎன்றுசொல்லி வணக்கமும்பேசியே
பூமிசிரிக்கும்படி பேரைவைத்தாய்நீயும் மாமிஎன்று

தூரியன் தரு

சிரிக்கும்படிக்கே செய்தான்
திருடனுக்குப் பெற்றபிள்ளை
நரிக்குப்போடுவேனிப்போ ஞாயமோபோவாய் சிரிக்

சாம்புவதி தரு

போரேன்மருகனே பின்னால்வருவதைநீயே
அனுபவிப்பாய் யேகினேன் போரே போவே

சாம்புவதி விருத்தம்

கடுங்கோபமாஎன்னைக் கடினமாய்க்கொல்லவந்தாய்
அடும்போரேசெய்வேனென்று ஆரம்பித்திருக்கிருய்நீ
கேடும்பழிநேருமென்று சேவன்தனைநிறுத்தி
தடம்கொண்டுவந்துசொன்னேன் சரிபோனபடிசெய்வாயே.

வசனம்

கேளும்மருமகனே உனதுமாமனர் இந்தசேதியைக் கேழ்விப்பட்டு உன்னுடன் எதிர்த்து சமர்செய்யும்படி கோபத்தோடு பயணப்பட்டார் அவரை நான் நிறுத்திவிட்டு உன்னை சமாதானப்

படுத்தி சிறைமீழ்சுதமென்று எண்ணிவந்தேன் இனி உனக்கு சம்மதம்தானு அதுபோலவே நடந்துகொள் நான்போய் வருகிறேன் மருகனே.

பொது வசனம்

இந்தப்பிரகாரமாக சாம்புவதேவியம்மன் திரியோதிரன் இடஞ்சென்று அனேக புத்திமதிகளை சொல்லியும் மகனை சிறை விடாமல் கோபத்துடன் திரும்பி வருகிறபோது திருதராக்ஷத மகாராஜன் சபாவாகிய கொலுவுக்கு வருகிறவிதங் காண்க.

திருதராக்ஷதன் விருத்தம்

தாரியனும்மனதுவெட்கி துயரமும்தன்னை நீங்கி
பரியவுன்தந்தைகாண பகைவருவருகும்போது
தாரியனும் எழுந்திருந்து திருதராக்ஷதனுமப்போ
கரிபரிசேனைசூழ கடுகியேவருகின்றாரே.

திருதராக்ஷதன் தரு

திருதராக்ஷதராசன் வந்தனரே
சபை நடுங்க திருத
விருதவீரியவேந்தா நெருங்கிட
சிறுதுகாவல் ரிருபுறம்வர திருத
நீண்டமாமுடி சொலித்திடவே
தாண்டியநடந்தேவர் களிக்கவே திருத
முத்துமாமணிகுடை பிடிக்கவே
கெதைதனிர் கொடுக்கவே திருத
கண்டஅண்டர்கள் திடுக்கிட்டேங்கிடவே
கண்டாமணி கீதம்பாடவே திருத

சாம்பவதி விருத்தம்

துய்யமாமகுடம் துரைசேகரனே
மெய்யிலுலிந்த மேதினியாளும்
பெரியவரரசே பொன்னடிவணங்கும்
அய்யாவுந்தன் அடியிணைசரணம்.

வசனம்

கஞ்சமாமுனியாகிய அய்யா உமதுபாதாரவிந்தமாகிய கமலங்களும் அடியாள் தீர்கவந்தனம் வந்தனமய்யா சுவாமி.

திருதராக்ஷதன் வசனம்

நீயாரம்மா மகாராசியா இருப்பாய் எழுந்திருஅம்மா.

சாம்புவதி தரு தர்க்கம்

அய்யாஎனக்கொரு மகனுச்சே
அய்யாஅவன்சிறையிருக்க விதியாச்சே

தூய்யனே எங் கொடியாச்சே
நீயும் சொல்லிவிட வொண்ணுதோசிசுவாச்சே
முடுக்கு - தோதகமென்னு பாதகமோ
மனம் சாதகமாமிது பாதகமாச்சே அய்யோ

திருதராக்ஷதன் தரு

என்னுசொன்னுயடி போடி
எங்கும் நகைக்க மகனைத்தேடி
முன்னாள் விதியோ மனம்வாடி
மொழிய பங்கவாயை மூடி
முடுக்கு - மோசமும் கொண்டுமே மெச்சி யிருக்கவும்
நேசமும் கொண்டுமே பேசவந்தாயோடி என்ன

சாம்புவதி தரு

தெரியாமல் பிழைசெய்தால்
திட்டி யடித்து வைத்தால்
பெரியோர்க் கழகாமோ
பெருமைத் துயர்கள் போமோ
முடுக்கு - பெரியவரிப்படி குறவரியாமலே
நெறிமுறை தப்பியே சிறைவைக்கலாமோ தெரியாமல்

திருதராக்ஷதன் தரு

பாவிமகளை விடுத்து நாங்கள்
பங்கமடையகுடி கெடுத்த
ஆவிவாடி இருக்க
அரும்சிறை விடவந்தாய்
அற்பமோாட எப்படிபேசுருய்
இப்படியென்று செப்பிட
வேண்டாம் பாவிமக

திருதராக்ஷதன் வசனம்

அம்மா சாம்புவதியே எங்கள் சந்திரகுலத்திற்கு யீனம்வரும் படியாக ஒருவிரலத்தினிபையன் அச்சம்பயமில்லாமல் இப்படிப்பட்டகாரியம் செய்பவனை அப்பவே உயிர்ச்சேதம் செய்யவேணும் அப்படிசெய்யாமல் சிறையில்வைத்தது பிசகு அவனை விடுவதேது நீங்கள் இட்டுக்கொண்டு போவதாவது ஒருபோதும் விடமாட்டேன் அப்புறம் நடயும் சாம்புவதியே.

சாம்புவதி விருத்தம்

கொடிய ரமதனைப் படைத்தோன் தன்னைக்கேட்டு
வடிவிடை சாம்புவதி மனதுநொந்து கொடியிடையாள்
துவாரகை கோவில்சென்று அடியிணையில் தாள்பணிந்து
நடந்ததெல்லாம் அப்போது மாயருக்கு அறிவிப்பாளே.

வசனம்

இந்தப் பிரகாரமாக சாம்புவ தேவியானவள் துரியோதனன் திருதராட்சதனிடத்திலே அனேகம் சொல்லியும் கேளாமல் போய் விட்டபடியினால் இவனுக்குத் தகுந்த மரியாதை செய்தால்தான் விடுவானென்று துவாரகைக்குவந்து பிராணநாயகரைக் கண்டு கொள்ளுகிறவிதம் எப்படி என்றால்.

சாம்புவதி விருத்தம்

நல்லவார்த்தை அநேகம்நான் சொல்லி கேட்டிடாமல்
வல்லவர் நீருமேகிமகன் தன்னை சிறையில்வைத்த
புல்லரி வாளர்தம்மை போர்சென்று மகனைமீட்டி
வல்லமையரிந்து வாரும் மலரடி வணங்கினேனே.

வசனம்

கேளும் எனது பிராணநாயகரே தேவரீர் அடியாளிடத்தில் சொன்ன சேதியெல்லாம் அவ்விடம்போய் அவர்கள் இடத்தில் அனேக விதமாக புத்திசொல்லியும் கேளாமல் மகனைவிடமாட்டே னென்று எடுத்தெரிந்து பேசிவிட்டான் ஆகையால் துஷ்டனுக்கு சிஷ்டை செய்து மகனை சிறை மீட்டுக்கொண்டு வாரும் பிராண நாயகரே.

கிருஷ்ணன் விருத்தம்.

ஆர் சொல்லும் கேழ்க்க மாட்டேன் அக்கிரம துரியன்தானும்
போர்செய்து மடிக்காவிட்டால் புரிசுகம் கொடுப்பதுண்டோ
ஓர் சொல்லும் மறியவேண்டும் ஓடி மாதவனே நீயும்
சீர்பெருந்தமையன் தன்னை லக்ஷணத்தி லழைத்துவாராய்.

கிருஷ்ணன் வசனம்

கேளும் பெண்ணே சாம்புவதி அந்த துரியன் நல்லமனதாக சொன்னபோதிலும் மகனைவிடமாட்டேன் அது எப்படியென்றால் புலியானது தன் உயிர் போகிறவரைக்கும் ஒரு நகமும் கொடுக்க மாட்டாது அதுபோலே கவுறவானை அதம்செய்து புத்திரனை மீட் டுக்கொண்டு வருகிறேன் நீர் அரண்மனைக்குப்போய் சேரும் பெண்ணே பிராணநாயகி

வசனம்

கேளும் மாதவா உன் தமையன் பலராமரை நான் அழைத் தேனென்று அதிக சீக்கிரத்தில் அழைத்துவருவாய் மாதலி.

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக பலராமர் சபாவாகிய கொலுவுக்கு வருகிறார்

பலராமர் விருத்தம்

தேசமன்னர் துதித்திருமுடி யலங்கரித்து
நேசமாம் அமரர்வாழ்த்த நிகரில்லாப் புகழ்கெம்பீரன்

வாசவன் மனம்க வரும்படி சொன்னசேதி
பாசமாய் யறியவேண்டி பலராமர் வருகின்ருரே.



பலராமர் தரு

தேவர்பலராமர்
வெகுஉச்சித

தேவரு
காவலர்மனம்
முடுக்கு-சிறமித்திடும்
வெடிமிகுத்திட

பேரிகைமுரசு
இடுகிடென்றுவீரரும்
தாரசின்னபூரி
தவண்டமல்லாரி
முடுக்கு-சண்டநமனும்
கண்டபேர்களும்

சந்தமுந்தொனிகள்
தம்புருவீணைமங்கள
துங்கமணப்
சோதிப்பளப
முடுக்கு-சூரசூரருமாரி
பாரிலதிபதி

தண்டயம்பளப
காலிலணிந்த

வந்தனரே
யாகவே தேவர்

நடுநடுங்க
.ஒடுங்க
படைகளேந்தியே
. தேவர்பலரா

பாடவே
தீரம்வாடவே
டங்கா
போட
பயந்துவாடவே
கலங்கியோடவே தேவர்பலராம

யாடவே
மாதர்களாடவே
பூஷணங்கள்
ளென்ன
மிஞ்சியே
தீரனுகிய தேவா

ளென்னவே

வெண்டயம்

குண்டலம் செவியிலாட
கோதையர் களித்துபாட
முடுக்கு-குத்தமகத்திடும் உத்தமதம்பியும்
பத்திமிஞ்சியே சித்தமரியவே தேவர்

பொது வசனம்

இப்படியாக வந்த பலராமரை ஸ்ரீகிருஷ்ணதேவர் ப
சொல்லுகிற விதங்காண்க.

கிருஷ்ணன் தரு தர்க்கம்

அண்ணாஉன்பாதம் சரணம்
துரியோதனன்மகளை அறிந்துநல்லத்தருணத்தருணம்
குண்ணமலேரதத்தில் கொண்டுவரவேகண்டு
முடுக்கு-கொடுத்தசாம்புவனை பத்திசிறையில்வைக்க
சத்துருக்களைநாம் வெற்றிபெறவேண்டும் அண்ணா

பலராமர் தரு

பதறாதே தம்பிகேளடா
படைஎடுத்திட அவன்மேல்
பதைக்காதே மனம்நாளடா
அதிலேபழிப்பாவம் அபகீர்த்திநமக்காகும்
முடுக்கு-அடுத்துமே ஒருமொழிவிடுத்துமேவருகிறேன்
தடுத்தொரு வார்த்தையும்
எடுத்துச் சொல்வனோ பதறாதே

கிருஷ்ணன் தரு

சாம்புவதியை விடுத்தேன்
பரிதாபவசனம் தந்ததெல்லாம்தடுத்தான்
வம்புகள்மிகபேசி விடமாட்டேனென்றுரைக்க
முடுக்கு-வெருத்துமே யவள்வந்து
வருத்தமுடனேசொன்ன கருத்தைமகிழ்ந்துமே
பொருத்திடு வானேசாம்பு

பலராமர் தரு

கோபம்பொல்லாதது பாரடா
நாம்கொண்டும் கொடுத்திருக்க
கொற்றவனவ ரடா
பாவமஉலகில்பழிக்கிய பகையாகாது
முடுக்கு-பாரும்எனக்கு யிடைதாருமவனைக்கண்டு
கூறும்மகனை சிறைமீட்டு
சிறுடன் வருகிறேன் கோபம்

பலராமர் வசனம்

கேளும் தம்பி கிருஷ்ணமூர்த்தியே அந்தத்திரியோதனனுக்கும் நமக்கும் கொண்டு குடுத்திருக்கிற நாமவனை எதிர்த்து சண்டைக்குப்போகிறது சரியல்ல உலகத்தார் பழிப்பார்கள் ஆகையால் நான்போய் அவனுக்குத் தகுந்த புத்திமதிகளைச் சொல்லி எப்படியாவது நமது குமாரன் சாம்புவதேவனை சிறைமீட்டி வருகிறேன் விடைகொடுத்து அனுப்பும் தம்பியே.

கிருஷ்ணன் வசனம்

கேளும் எனது தமையனாரே தாங்கள் மனதுபோலே உத்திரவளித்தேன் போய்வாரும் தமையனாரே.



பலராமர் விருத்தம்

தம்பியுடகையிலே செலவுபெற்று
　தனியாகரதமேறி துவாரகைவிட்டு
கெம்பீர முடனே அம்புகெதையுமேந்தி
　கெர்ச்சித்து ஆக்கரித்து வேகமாக
வம்பனாந்ததிரியனிடம் சென்றுயெந்தன்
　மகனைவிடு என்றுரைப்பேன் தடங்கல்சொன்னால்
கொப்பெனவே நூற்றொருவர் தன்னையானும்
　கொல்லுவேனென்றுசொல்லி வருகின்றாரே.

பலராமர் தரு

அடுத்துரியன் ஆரிந்துவரு சேதியெல்லாம் அருமைத்தம்பியைபொரும் னிடத்திலேகிறேன் தெரிந்துவருகிறேன் பொருமெனமீறிநடந்தார்

